இப்புத்தகம்,

இந்திய நாட்டின்
தென்கோடிப் பகுதியின்
தெய்வத் தன்மையையும்,
இயற்கை எழிலின்
இன்புறு காட்சியையும்
எடுத்து விளக்கும்
ஒளிப்படங்களோடு,
கன்னியாகுமரி, சுசீந்திரம்
குறித்த
கதை வரலாற்றுக்
குறிப்பினையும்
களிப்புறத் தந்துதவும்.

# கன்னியாகுமரி



✲

ஆக்கியோன்:

"சிசு"




✲

வெளியிடுவோர்:

ஹரிகுமரி ஆர்ட்ஸ்

கன்னியாகுமரி

 [Price Rs. **1.50**

34-1

# கன்னியாகுமரி

## கருத்தைக் கவரும் கன்னியாகுமரி

உலகில், கன்னியாகுமரி, காண்போருடைய மனதில், என்றும் மாருது பதிந்திருக்கும் ஒரு சில இடங்களுள் ஒன்று இது தவிர, இந்தியாவில் மிகச்சிறந்த இயற்கையழகு வாய்ந்த ஓரிடம். மேலும் ஓர் சிறந்த தீர்த்தத் துறையையுடைய புண்ணிய கடற்கரையுமாகும். இது இந்தியாவின் தென்கோடி முனையாதலால் இங்கு நின்று காலைக் கதிரவன் கனிந்த ஒளியோடு வங்கக் கடலில் தோன்றுவதையும், மாலைக் கதிரவன் மங்கிய ஒளியோடு அரபிக்கடலில் மறைவதையும் காணலாம். இது முறையே மக்கள் வாழ்வின் கவர்ச்சியுடைய குழந்தைப் பருவத்தையும், மனங்கலங்க மாய்ந்து மறையும் முதுமைப் பருவத்தையும் ஒருங்கே கருத

வங்கக் கடலில் வளரும் கதிர்த்தோற்றம்.



வைக்கும். ஆதலால் ஆயிரக்கணக்கான காட்சி யாத்திரீகர்கள் வந்து காட்சியின்பம் அடைந்தும், காந்திக் கட்டடத்தைக் கண்டு இந்தியத் தந்தை யாகிய மகாத்மாவை மனமார நினைந்து வாழ்த்தியும், ஆயிரக்கணக்கான தீர்த்த யாத்திரீகர்கள் வந்து கடல்நீராடிக் கன்னித் தெய்வத்தை வணங்கியும் மனவமைதிபெற்றுச் செல்கின்றனர்.

இக்கடல்துறை கிழக்கே வங்கக் கடலும், தெற்கே இந்தியப் பெருங்கடலும், மேற்கே அரபிக் கடலும் ஆகிய மூன்று கடலுங் கூடி அலைமோதும் அழகிய காட்சியுடையது. ஆகவேதான் சில நிறைமதி நாளன்று, இக்கடல் துறையில் நின்று மாலைக் கதிரவன் மேலைக்கடலில் மறைவதையும், மாலை மதியவன் கீழைக்கடலில் கிளர்ந்தெழுவ தையும் ஒருசேரக் கண்டுகளிக்கலாம். கடலிலே சில கற்குன்றும், அவைமீது நீரலை மோதலும், கரையிலே சில மணற்குன்றும், அவைமீது காற்றலை மோதலும் மக்கள் வாழ்வும், துன்ப அலையும்

மகாத்மாவின் நினைவு மண்டபம்



போன்று காட்சியளிப்பதன்றி, அத்தகைய துன்ப அலையைப் போக்குவதற்குரிய இடம் குமரியும், அது போன்ற ஒரு சிலவுமே என்றும் கருதத் தோன்றும். கடற்கரை, பலநிற மணலும், பலவகைக் கடற்படு பொருளும் கொண்டு தம் அலைக் கையால் வா வா என்றழைப்பது போன்று உரக்கக் கூவிக் கவரும் இயல்புடையது. இவையன்றி, இத்துறை, பராசக்தி யுறையும் பழங்கோயிலுடைமையால் பாராட்டப் பட்டு, இந்தியா முழுமையும் பரந்த புகழுமுடையது. காசிக்குச் சென்றோர் கன்னியாகுமரி வந்து கன்னி யாக வாழும் கடவுளை வணங்கவேண்டும் என்பது இந்துக்களுக்கோர் சிறந்த மறைநூல் விதியாகும்.

## பழமை தரும் பெருமை

பழைய திருவிதாங்கூர் மாநிலத்தின் தென் பகுதியாகிய நாஞ்சில் நாட்டின் தென்கோடிப் பகுதியே கன்னியாகுமரி. திருமாலின் அல்லது

முக்கடலும் கூடும் முனைப்பரப்பு



அரியின் ஆருவது அவதாரமாகிய பரசுராமர், இன்றுள்ள கேரள மானிலம் உட்படக் கோவா முதல் குமரிவரையுள்ள நிலப்பகுதி முன் கடலாக இருந்ததை நிலமாக்கினுர் என்று புராணம் கூறும். அரசவீரர் பரசுராமர், அந்தணருக்கு நிலமுதவி யருளுவதற்காகக் கடல்தெய்வமாகிய வருணனிடத்தில் தன் மழுப்படையைக் கடல் நீரில் வீச விடையருளுமாறு வேண்டிக் கொண்டார். அவ்வாறே, கோவாவிலிருந்து எறியப்பட்ட மழுப்படை குமரியில் வந்து வீழ்ந்ததும் கடல்நீர் இப்போதுள்ள கேரள மானிலத்தை விடுத்து நீங்கியது என்பது கதை. இது வரலாறல்ல.

ஆயின், தமிழ்நாட்டின் ஓர் பகுதியை ஆண்டு வந்த பாண்டியர் ஆட்சியின்கீழ் நாஞ்சில் நாடு நூற்றுக்கணக்கான ஆண்டுகள் இருந்து வந்ததாக வரலாற்ருசிரியர் கூறுவர். இப்பகுதியிலுள்ள கட்டிடக் கலேயும், மக்கள் பழக்க வழக்கங்களேயும் காணுங்கால் தமிழ்நாட்டின் தொடர்பு இப்பகுதிக்கு மிகுதியாக இருந்து வந்ததாகவே தென்படுகின்றது. சிறப்பாகக் கோயில்கள் யாவும் தமிழ் மக்களது கலேயமைப்பைக் கொண்டனவே யாகும். தவிரக் கன்னியாகுமரி, நெடுங்காலமாகப் பாண்டிய நாட்டின் ஓர் பகுதியாகவே இருந்தது என்பதற்கு வேண்டிய வரலாற்றுத் தெளிவுகள் உள்ளன. சில பழந்தமிழ் இலக்கிய நூற்களும், கல்வெட்டுக்களும் கன்னியாகுமரி தமிழ் நாட்டின் ஓர் பகுதி என்பதனே யும், குமரித் தெய்வம் பாண்டியரின் குலதெய்வம் என்பதனேயும் குறிப்பிடுகின்றன. அன்றியும், மேலே நாட்டாசிரியர் பலரும், தாலமி போன்ற யாத்திரீகர் சிலரும் குமரியை ஓர் நீர்த்துறையாகவும், தமிழ் நாட்டோடு தொடர்புடையதாகவுமே குறிப்பிடுகின்றனர். யாவற்றையும் கருதிப் பார்க்கும்போது


கோவிலின் முகப்பு

கன்னியாகுமரி, தமிழ் நாட்டின் ஓர் பகுதி என்பதும், பல நூற்றுண்டின் முன்னிருந்தே பலராலும் குறிப்பிடப்படும் ஓர் சிறந்த நீர்த்துறை என்பதும் தெரியவருகின்றது.

பரசுராமரைக் குறித்த பழங்கதை தவிர, வேருேர் சிறந்த நில நூலாசிரியரின் குறிப்பும் உண்டு. அதாவது, இன்று காணும் குமரித் துறையின் தெற்கே ஓர் பெருநிலபரப்பு இருந்ததென்றும், அதனைப் பிற்காலத்தில் கடல் விழுங்கியது என்று

குமரிக் கோவிலின் குணக்குக் காட்சி

மாம். மறைந்த நிலப்பரப்பின் பெயர் 'இலெமூரியாக் கண்டம்' என்றும், இதுபற்றிய விளக்கத்தின் பெயர் 'இலெமூரியக் குறிப்பு' என்றும் கூறுவர். தமிழர் சிலர், இவ்வாறு மறைந்த நிலப்பரப்பைக் குமரிக் கண்டம் என்பர். இத்தகைய பெரு நிலப்பரப்பு ஒருகாலத்தில் இருந்தது என்றும், அது கடல் கோளால் மறைந்தது என்றும் சிலப்பதிகாரம் போன்ற பழைய இலக்கிய நூற்களும் குறிப்பிடு கின்றன. அன்றியும், கடல்மீது சென்று வலைவீசு வோரும், கடலுள் பல கட்டிடங்கள் இருந்ததற்கு அறிகுறி பல காணப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். இன்னோரன்ன குறிப்புகளையும் வரலாற்றாசிரியர் சிறப்பாகப் பொருட்படுத்துவதில்லை.

## தலபுராணந்தரும் தவக்குமரி

இந்தியா, பரதம் அல்லது பரத கண்டம் என்ற பெயரை, பல நூற்றாண்டின்முன் இந்நாட்டை யாண்ட புராணப் பேரரசனாகிய பரதன் என்பவ

கூர்ந்து முடியும் குமரி முனை



னிடமிருந்து பெற்றது. அவனுக்கு ஆண்மக்கள் எண்மர்; பெண்மக்கள் ஒருத்தியாக ஒன்பதின்மர் மக்கள் இருந்தனர். அவருள் பெண்மகள் பெயர் குமரி என்பது. பரதன் முதுமையில் ஓய்வு எடுத்துக் கொள்ளக் கருதியபோது, தன் நாட்டை ஒன்பது பாகங்களாகப் பாகுபடுத்தி, ஒவ்வோர் பகுதியையும் ஒவ்வொருவர் பெறுமாறு செய்தான். தென்கோடிப் பகுதி குமரி என்னும் மகளுக்குரியதாகியது. அக் காலந்தொட்டு இப்பகுதியும் குமரி என்னும் பெயர் பெற்றது என்பர். இவ்விடத்திற்குப் பராசக்தி தவமிருக்க வந்தாள் என்றும் பரசுராமர் குமரி தெய்வ உருவை இவ்விடத்தில் அமைத்து வைத்தார் என்றும் சில குறிப்புகளையும் புராணம் குறிப்பிடுகின்றது. ஆயின், கல்வெட்டின்படி, காணுங் கோயில் பிற்காலத்துப் பாண்டிமன்னரால், கட்டப் பட்டதாகத் தென்படுகின்றது.

முக்கடல் துறையிலே முப்பெருங்காட்சி. (நீராடுதுறை, நினைவு மண்டபம், கோவில்)





ஆழ்கடலும், அலைமலையும்

மாலையிருளில் மகாத்மாவின் மண்டபம்



## குமரித்தெய்வங் குறித்த புராணக் குறிப்பு

முன்னொரு காலத்தில், தேவர்களை அசுரர் அடக்கியாண்டனர். அறம் தலை தாழ்த்தியது; மறம் தலைதூக்கியது. தீமையும், பாவமும்பெருகின. அறியாமையும், அநீதியும் ஆட்சிபுரிந்தன. பெண் குலத்தின் கற்புச் சூறையாடப்பட்டது. அசுரர் அரசனாகிய பாணாசுரன் மூவுலகுக்கும் முடிவு தேடினான். விண்ணவரை ஓட்டித் தூயோர்க்கும், முனிவர்க்கும் தொல்லை கொடுத்து வந்தான். நிலமகளாகிய தாய், உலகை இருள் மயமாக்கும் தீய திறனை ஒழிப்பதற்குத் திருமாலை வேண்டி நின்றாள். திருமால் தீத்திறங் கொண்ட பாணாசுரனைப் பராசக்தியால் மட்டுமே கொல்லமுடியும்; ஆகவே தேவர்கள் பராசக்தியைப் பரவல் வேண்டும் என்றார். அதன்படித் தேவர்கள் பராசக்தியை வேண்டிக் கொள்வதற்கு ஓர் பெரு வேள்வி செய்தனர். வேள்வி முடிவில் சக்திதேவி வெளிப்பட்டுப் பாணாசுரன் தலைமையில் நிகழும் தீய திறங்களை ஒழித்து, ஒழுங்கும் அறமும் உலகில் நிலை பெறச் செய்வதாக உறுதி மொழிந்தாள். அன்று முதல் அவள் ஓர் கன்னி அல்லது குமரியாகக் கன்னியாகுமரிக்கு வந்து கடுந்தவம் புரியலானாள். நாள் செல்லக் கன்னிதேவி மணப்பருவம் அடைந்ததும், சுசீந்திரம் என்னும் திருப்பதியிலுள்ள கடவுளாகிய சிவபெருமான் அவள்மீது காதல் கொண்டமையால், அவருக்கு அவளைத் திருமணம் முடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டன. ஆயின், அசுரர் தலைவன் ஓர் கன்னியால்தான் கொல்லப்படுவான் என்று பிரம்மதேவனால் விதிக்கப் பட்டிருந்தமையால், இத்திருமணம் நிகழுமாயின், பாணாசுர அழிவுக்குரிய வாய்பைக் கெடுத்துவிடுமெனத் தேவமுனி, நாரதர் உணர்ந்தார். ஆகவே, நாரதர், இத்திருமணம் நிகழாதிருப்பதற்கு வேண்டிய

வழிவகைகளைக் கருதலானார். அதுகுறித்து அவர் குமரி பராசக்தியையும், பரமசிவத்தையும் நேரில் சென்றுகண்டார் கண்டு, மணங்குறித்த மகிழ்வைத் தெரிவித்தார். திருமணம், குறிப்பிட்ட ஓர் நாளில், நள்ளிரவில், ஓர் நற்போதிலேயே நிகழவேண்டும்; அதற்கு ஆயத்தமாக இருங்கள் என இருவரிடமும் கூறினார். அவ்வாறே சிவபெருமான் குறித்த இரவில், தன் இன்பத்திற்குரிய எண்ணம் ஈடேறுவதைக் குறித்து மனம் மிக மகிழ்ந்தவராய்த் திருமணத்திற்குக் குறித்த நற்போது தவறிவிடக் கூடாதெனக் கருதிக் கன்னியாகுமரிக்குப் புறப்பட்டார். ஆயின் இறைவர், சுசீந்திரத்திலிருந்து கன்னியாகுமரிக்குப் போகும் வழியில், தேற்கே ஒரு கல் தொலைவிலுள்ள வழுக்கம் பாறை என்ற இடத்தை அடைந்ததும், நாரதர் ஓர் சேவல் உருக்கொண்டு உரக்கக் கூவிப் பொழுது புலர்ந்துவிட்டதெனத் தவறுதலாகப் புரிந்துகொள்ளு மாறு செய்தார். ஆகவே மணத்திற்கெனக் குறிப் பிடப்பட்ட நற்போது கழிந்துவிட்டதாகக் கருதிச் சிவபெருமான் தன்னிருப்பிடமாகிய சுசீந்திரத்திற்கு வருத்தத்துடன் திரும்பினார். அதுகொண்டு கன்னி தேவியும், அதன்பின் என்றும் கன்னியாகவே இருப்பதாகத் துணிவு கொண்டாள். திருமணத்திற் கென்று செய்யப்பட்ட வகை வகையான உணவுப் பொருள் யாவும் வகைவகையான மணலாக மாறின. அதன் சான்றாகவே, இன்றும், குமரிக்கடல் துறையில் சோற்றுபருக்கை போன்ற வெண் சிறு மணலும், வேறு வகையான பலவண்ண மணலும் மிகுதியாகக் காணப்படுகின்றன என்பர்.

இவ்வாறு கன்னிதேவி கடுந்தவமிருக்கவே ஓர் நாள், பாணாசுரன் தேவியின் அழகைக் கூறக் கேட்டு, அவளை நேரில் காண வந்திருந்தான். கண்ட தும் அவனுள்ளத்தில் ஒருதலைக் காமம் தோன் றவே, அவளை மணந்துகொள்ள வேண்டினான்.

ஆயின்தேவி, அவ்வெண்ணத்தைக் கடுகளவேனும் கருதாது வெறுத்து கழித்தமையால், அசுரன் அவளைத் தன் உடல்வலிமையால் கவர்ந்துகொள்ள எண்ணித் தன் உடைவாளை உருவினன். தேவியும் இத்தகைய காலத்தை எதிர்நோக்கியிருந்தவள், தன் போர்வாளை வீசினாள். நெடுநேரமாக இருவரும் கடும்போர் புரிந்தனர். இறுதியில், தேவி தன் சக்கரப்படையால் பாணாசுரனைக்கொன்றொழித்தாள். தேவர் யாவரும் தேவிக்கு நன்றி செலுத்தவே, தேவியும் அவர்களை வாழ்த்தியருளினாள். பின் யாவரும் பிரிந்து செல்லத் தேவி மீண்டும் தவ மேற்கொள்ளத் தொடங்கினாள்

இப்போது, இங்கு, ஆண்டுதோறும் புரட்டாசித் திங்களில், கொண்டாடப்படும் நவராத்திரி விழா, பராசக்தி, பாணாசுரனைக் கொன்றொழித்ததை நினைவு கொள்ளவேயாகும். விழாவின் பத்தாவது நாள், தேவியின் உருவம், கன்னியாகுமரிக் கோவிலிலிருந்து வடக்கே 2 கல் தொலைவிலுள்ள மகாதானபுரம் என்னும் ஊருக்கு விழா ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். அவ்விடத்தில் ஓர் புறத்து, பராசக்திக்கும் பாணாசுரனுக்குமுள்ள போர் பூசாரிகளால் நடிப்பாக நடத்தப்படும் இது இன்று பரிவேட்டை என்றழைக்கப்படும். கதை இவ்வாறிருப்பினும், இது, மக்கள் உள்ளத்தில், என்றும் எப்போதும் நடக்கும் நல்லுணர்வுக்கும், தீயுணர்வுக்குமுள்ள போரின் அறிகுறியேயாகும். ஆகவே, குறிப்பிட்ட புராணக் கதையும் குறிக்கோளுடையதே என்னலாம்.

## இந்திரனும் வந்திக்கும் சுசீந்திரம் கோவில்

சுசீந்திரம் கன்னியாகுமரியின் வடக்கே 7 கல் தொலைவில் உள்ளது. இது கன்னியாகுமரியின் அருகிலிருப்பதாலும், இவ்வூர்க் கோவில் கடவுள்

சக்தியின் கணவனுகிய சிவன் ஆதலாலும், புராணமும், பொதுமக்கள் பேச்சும் இரண்டிடங்களையும் இணைத்துவிட்டன. சுசீந்திரம் கோவிலைக் குறித்த புராணச் செய்தி, மிகவுண்டு. இந்துசமயப் பல கடவுள் கொள்கைப்படி அயன், அரி, அரன் ஆகிய முப்பெருங் கடவுளரும் இக் கோவிலில் வைத்து வழிபடப்படுகின்றனர். இங்குக் கோவில் கொண்டுள்ள கடவுளாகிய சிவனை, இந்திரன் முன் வழி பட்டு வருகின்ருன் என்னும் புராணப் பழ மரபினையும் உடையது. இந்திரன் அகலிகை காரணமாகக் கௌதமரால் சாபம் பெற்று, ஓரளவு வியாழபகவாஞல் சாபவிடை பெற்று, பின், அதுவும் போதாமையால் சுசீந்திரத்திலுள்ள இறைவரை வணங்க, அவர் கட்டளைப்படிக் கன்னியாகுமரி சென்று கடுந் தவங்கிடந்து, தேவியருளால் மறுபகுதிச் சாப விடையும் பெற்ருன் என்பர். இதனுலும், சுசீந் திரம், கன்னியாகுமரி ஆகிய இரண்டிடங்களிலுமுள்ள கோவில்களுக்குத் தொடர்பினை யூட்டினர் என்னலாம்.

முன்பொருகால் பெருமுனிவர் அத்தியும், கற்புக் கரசியாகிய அனுசூயாவும் ஞானரண்யம் என்னும் பழம் பெயர் பெற்ற சுசீந்திரத்தில், ஓர் ஆசிரமத்தில் இருந்து தவஞ்செய்து வந்தனர். ஓர் நாள், அத்திமுனிவர் இமயஞ் சென்றிருந்த காலத்து அயன், அரி, அரன் ஆகிய மூவரும் அநுசூயாவின் கற்பைக் கருதியறிவதற்கு எண்ணி, அந் தணர் உருக்கொண்டு, ஆசிரமம் சென்று, அன்னம் கேட்டனர். அனுசூயாவும், வந்த விருந்தினர்க்கு உணவு படைக்கப் புறப்பட்டாள். மூவரும், உணவுண்ண இருந்ததும், ஆடையணிந்தஒருவரால் உணவு பரிமாறப்படுமாயின் உணவுண்ணலாகாது எனும் நோன்புறுதி கொண்டுள்ளோம் என்றனர்.

அநுசூயாதேவி தன் கற்பில் முழுநம்பிக்கை கொண்டவளாய்த் தன் கணவன் திருவடி கழுவிய நீரை அன்னுர் மூவர்மீதும் தெளிக்கவே, அம்மூவரும் பால் மணம் மாருப் பச்சிளங் குழந்தைகளாக மாறினர். பின்பு அவர்க்கு உணவூட்டினுள். சிறிது காலஞ் செல்லவே, நாரதர் தூண்டுதலால் மூவர் தேவியரும் தத்தம் கணவரைத் தேடி ஆசிரமம் அடைந்தனர். அடையவே அனுசூயை அம் மூவர்க்கும் பழைய உருவைக் கொடுத்தாள். அக் காலத்துத் திரும்பி வந்த அத்தி முனிவரும், அநுசூயையோடு அகமிக மகிழ்ந்தவராய் மும்மூர்த்திகளின் காட்சி பெற்றனர். இந்நிகழ்ச்சியை நினை

சுசீந்திரம் கோவிலும், தெப்பக் குளமும்



ஓட்டவே, சுசீந்திரம் கோவில் கட்டப்பட்டு, முப்பெருங் கடவுளரும் வழிபடப்பட்டு வருகின்றனர் என்பர். சுசீந்திரத்தருகே அத்திமுனிவரும், அவர் தேவியும் தவமிருந்ததாகக் குறிப்பிடப்படுவது ஆசிரமம் (ஆசிரமடம்) என்னும் ஊராக இன்று காணப்படுகின்றது என்பாருமுளர்.

சுசீந்திரம் எனும் பெயர் இந்திரனிடமிருந்து பெறப்பட்டது. இந்திரன் நன்நிலையடைந்த இடம் என்பது இதன் பொருள். அகலிகை காரணமாகக் கௌதமரால் சாபம் பெற்றுச் சுசீந்திரத்தில் இறையருள் பெற்றதை இது குறிப்பிடுகின்றது. இந்திரன் வழிபாட்டுக் காலத்தில், சுசீந்திரத்தில் கோவில் கொண்டுள்ள இறைவர் உருவச்சிலைக்கு நன்னிராட்டுங்கால் ஊற்றும் நெய்யும், பாலும், நீரும், நிலத்தினடியேயுள்ள ஓர் மறை வழியாகக்

கோவிலின் முப்பெருங்கடவுளர்.



கடந்து. கன்னியாகுமரிக் கடலில் சென்று கலக்கின்றது என்ற நம்பிக்கை இன்றும் இருந்து வருகின்றது. இவ்வாறு கடலில் கலக்கும் இடம் தாணு தீர்த்தம் எனும் பெயரால் அழைக்கப்படுகின்றது. கன்னியாகுமரிக் கோவிலுக்கு மேற்கே, கடற்கரையோரமாக ஏறத்தாழ 6 பர்லாங்குத் தொலை சென்றால் கடலலை வீசும் உப்புநீர் வடியும் ஓர் பாறை இடையே, ஓர் நன்னீர் ஊற்றைக் காணலாம். இதனையே, உப்பு நீரருகே நன்னீர் காண்பதால் வியப்பாகக் கொண்டு, சுசீந்திரத்தில் தாணுமூர்த்தி கோவிலிலிருந்து வரும் தாணுதீர்த்தம் என்பர். இவையாவும் கதையும், நம்பிக்கையுமாகும்.

சுசீந்திரம் கோவிலின் அகச்சுற்று மண்டபத்தின்
அழகிய அமைப்பு





அநுமன் உருவின் அழகிய நிலை

சுசீந்திரம் கோவில் ஓர் உயர்ந்த ஏழு நிலைக் கோபுரத்தை முகப்பில் கொண்டது. இதனை நாஞ்சில் நாட்டின் பல பகுதிகளில் நின்றும் காணலாகும். இத்தகைய கோபுர உச்சியில் நின்றால் நாஞ்சில் நாட்டின் பெரும் பகுதியையும், கன்னியாகுமரிக் கடற்கரையினையும் கண்குளிரக் காணலாகும். கோவிலின் அகச்சுற்றுமண்டபம், தென்னிந்தியாவிலுள்ள மிகப்பெரிய ஒருசில கோவில் அகச்சுற்று மண்டபங்களுள் ஒன்று. பரப்பிலும், அழகிலும் இது இராமேசுவரம் அகச்சுற்று மண்டபத்திற்கு மட்டுமே பிற்பட்டது என்னலாம். பெரிய அநுமன் சிலையும், இறைவன் ஊர்தியாகிய பெருவிடையின் உருவமும், நான்கு இன்னிசைத் தூண்களும், சில குறிப்பிட்ட மண்டபங்களின் கட்டழகும், கற்சிற்பமும் கல்வெட்டும் ஆகிய இன்னோரன்ன காணத்தக்கனவாகும். கற்சிற்பங்களுள் ஒன்று கணபதியின் திருவுருவமாகும். பிறவிடத்தில் காணமுடியாத பெண்ணுருவில் அமைந்த இப்பிள்ளையார் சிலை கண்ணுக்கோர் சிறந்த கலை விருந்தாகும். மற்றொன்று, இக்கோவிலைத் திருத்தியமைத்த திருமலைநாயக்கன் திருவுருவாகும். இங்கு நடைபெறும் மார்கழித் தேர்த்திருவிழா, சித்திரைத் தெப்பத்திருவிழா ஆகிய இரண்டும் பெருவாரியான மக்களைக் கவரும் இயல்புடையன.



தூணில் துலைத்த யாளி



கனிந்த இசை தரும் கல்தூண்கள்

## குமரி நீராடலும், கூடுங் குணமும்.

கன்னியாகுமரிக் கோவிலைச் சூழ்ந்த கடல் துறை சாவித்திரி, காயத்திரி, சரசுவதி, கன்னியா, ஸ்தாணு, மாத்ரு, பித்ரு முதலிய பல நன்னீராடும் (தீர்த்த நீராடும்) கட்டங்களைக் கொண்டது. முக்கடலும் கூடுமிடத்திலுள்ள நீராடு கட்டமும், 16 தூண்களுடைய மண்டபமும் மிகச் சிறப்புடையன. இக்கட்டத்தில் ஓர் தடவை நீராடின் உடல் மட்டுமல்ல; உள்ளமும் கழுவித் தூய்மை செய்யப்பட்டனவாகும். மங்கை ஒருத்தி தன் கற்பிழந்தமையால் தன் தீவினை நீங்கக் காசியிலிருந்து கன்னியாகுமரிக்கு நீராட வந்தாளாக மணிமேகலை கூறுகின்றது. மகாபாரதம், வன பருவத்தில், "ஒருவன் கடல்துறையாகிய கன்னியென்னும் தீர்த்தக் கட்டத்தில் நீராடல் வேண்டும்" என்று கூறுகின்றது. அன்றியும், "அங்கு நீராடலால் ஒருவன் தன் தீவினைகளையெல்லாம் போக்குகின்றான்" (பா-23) "நோன்பிருந்த உணவோடு,

நீராடுதுறை



பணிந்த மனமும் கொண்டு கன்னியாவிற்குச் செல்லுதல் என்பது, மநுவின் உலகிற்குச் செல்லுதலாகும்" (பா 136-138) "கன்னியாவில் எவ்வகை ஈகையைச் செய்யினும், அது நிலைபேறுடையது" என்றும் கூறுகின்றது இவ்வாருன தீர்த்த நீர்ப் பெருமையுடையது குமரி.

## குமரியில் திருவிழா

கன்னியாகுமரியில், புரட்டாசித் திங்களில் நடக்கும் நவராத்திரி விழா தவிர வைகாசித் திங்களில் பத்துநாட்களாக நடைபெறும் மற்ருேர் திருவிழாவும் உண்டு. இத்திருவிழா நாட்களில் காலையிலும், இரவிலும் ஊர்பெருந்தெருவழியாகத் தேவியின் திருவுருவம் விழாவூர்வலமாக எடுத்துச் செல்லப்படும். ஒன்பதாவது நாள் தேர்த்திருவிழாவும், பத்தாவது நாளாகிய இறுதிநாள் தெப்பத் திருவிழாவுமாகும். தெப்பத்திருவிழாவன்று, நன்ருகக் கோலஞ்செய்யப் பெற்ற தெப்பத்தில், தேவியின் திருவுருவம், நீரின் மேல் வலமாக மிதப்பில் கொண்டுசெல்லப்படும்.

## குமரி வாழ்வும், அமர வசதியும்.

கன்னியாகுமரியில் சிலநாள் வாழின் சிரிய உடலும் உள்ளமும் பெறுவதியல்பு. இத்தகைய இன்ப வாழ்க்கைக்காக உலகின், சிறப்பாக இந்தியாவின் பல பாகங்களிலுமிருந்தும் மக்கள் வந்து வாழ்ந்து செல்வது வழக்கம். நாள்தோறும் மாலை வாழ்வுக்காகக் குமரியை நோக்கி நடையும், ஊர்தியும் கொண்டு விரைந்து செல்வோர் பலர். மாலையில் குமரிவாழ்வு ஓர் தனி மனமகிழ்வாகும். இவ்வாறு பல வகையில் வருவோர்க்குத் தங்கும் வசதியும் பலவுண்டு. அரசினர் சத்திரத்திலும்,

தேவஸ்தானக் கட்டிடங்களிலும் நல் வகையில் தங்குமிடத்தைப் பெற்றுக் கொள்ளலாம். 'கேப் ஓட்டல்', 'கேரளா ஹவுஸ்', 'தேவஸ்தானச் சத்திரம்' முதலியன இன்று நாகரிக நிலையில் வசதிகளைக் கொடுக்கத் தக்கனவாகும். 'கேப் ஓட்டல்' எதிரே கடற்கரையில், புதிய முறையிலமைக்கப்பட்ட ஓர் நீராடு குளத்தையும் காணலாம்.

## ஊரும், உறைவோரும்.

கன்னியாகுமரி ஓர் சிற்றூர். அதன் மக்கள் தொகை 1961-ம் ஆண்டின் கணக்குப்படி ஏறத் தாழ 7000 ஆகும். அவருள் பெரும்பான்மையோர் கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்தோராவர். இவருள் பெரும்பான்மையோர் மீன்பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டவர்கள். இங்குள்ள கத்தோலிக்கர் கோவில் இந்தியாவிலுள்ள மிகப் பெரிய பழமையான கோவில்களுள் ஒன்று. ஒரேசமயத்தில் 1000 பேர் இருந்து தொழுவதற்கான வசதியளிக்கத் தக்கது. பிரான்ஸிஸ் சேவியர் முனிவர் கன்னியாகுமரிக்கு வந்திருந்தபோது, அவர் இப்பரதவரிடையே தங்கி அன்னோர் துன்ப விடுதலைக்காகப் பெரும் பாடு பட்டாராகக் கூறப்படுகின்றது.

இவ்வூரில், இஸ்லாமியர் தொழுகைக்கான ஓர் முஸ்லிம் பள்ளியுமுண்டு.

## கன்னியாகுமரியில் காந்தி மண்டபம்.

மகாத்மாவின் மறைவின் பின் அன்னாரது அஸ்தி, 1948 பெப்ரவரி 12-ல் கன்னியாகுமரிக் கடலில் கரைப்பதாகக் குறிப்பிடப்பட்டது. கடலில் இடுமுன் சாம்பல் வைக்கப்பட்ட கலன் ஓர் பீடத்

தின் மீது வைக்கப்பட்டது. இவ்விடத்தில், முன்னேய திரு-கொச்சி அரசு, இந்தியத் தந்தைக்குச் செய்யும் வழிபாட்டுக் கடனுகை, ஓர் நினைவுக்குறி கட்டக் கருதியது. காந்தியடிகளாரது முதல் மாணவரும், அவர் தத்துவ விளக்கத்தை மேற்கொண்டவருமாகிய ஆசாரியர் கிருபளானி 1954 ஜூன் 20-ல் அத்தகைய நினைவுக் கட்டிடத்திற்கு அடிக்கல்லிட்டார். 3 லட்சம் ரூ. செலவில், 1956 அக்டோபரில் நினைவுமண்டப வேலை முடிவுற்றது. இந்நினைவு மண்டபத்தின் பீடத்திற்கு நேர் மேலேயுள்ள துவாரம் வழியாகக் காந்தியடிகளாரது

காந்தி மண்டபம்



பிறந்த நாளாகிய அக்டோபர் 2-ல், கதிரவன் ஒளி பீடத்தின்மீது படும்படியாகக் கட்டிடம் அமைந்திருப்பது இம் மண்டபத்தின் ஓர் தனிச் சிறந்த அமைப்பாகும்.

## விவேக அலைவீசும் விவேகானந்தர் பாறை

கன்னியாகுமரியில் கடலில் கீழ்புறத்தில் காணப் படும் இரட்டைப் பாறைகள் இன்று, இந்துசமயப் பெருந்துறவி, சுவாமி விவேகானந்தரது பெயரிட்டு அழைக்கப்படுகின்றன. விவேகானந்த அடிகளார், 1892-ல் நடத்திய தனது இந்தியச் சுற்றுப் பயணத்தின்போது இராமேசுவரம், மதுரை முதலிய இடங்களைக் கண்டு களித்தபின், கன்னியாகுமரிக்கு வந்து, கோயில் கொண்டுள்ள தேவியின் திருமுன் தன்னை மறந்த நிலையில் நிலத்தில் படிந்து வணங்கி னர். அதன்பின் கடலிலுள்ள இரட்டைப் பாறை களைக் கண்டதும் அவற்றைச் சென்றடைவதற்

விளங்கித் தோன்றும் விவேகானந்தர் பாறை



காகக் கடலில் குதித்தார். ஏறத்தாழ ஒருகல் தொலை யுள்ள கடல் நீரில் அச்சமின்றி நீந்திச்சென்று பாறைகளையடைந்தார். சிறிதுபொழுதில் பாறையைச் சூழ அலைமோதி நீரை வாரி இறைக்கப் பாறைமீது அவர் ஆழ்ந்த தன்னை மறந்த தவநிலையில் நெடு நேரமிருந்தார். ஒரு சில வாண்டுகளின்முன், இவ் விளந்துறவி இந்தியத்தாயின் முடியாகிய இமயச் சாரலில் சுற்றித்திரிந்தார். ஆயின், இப்போது அவர் இந்தியத்தாயின் திருவடிகளில் தவமிருப்பதாகப் பாறைமீதிருக்கும் போது தனது இந்தியத் தாய்நாட் டையும், துன்பப்படும் இந்தியச் சகோதரர்களையும், துன்ப நிலையிலிருந்து அவர்களை விடுதலை செய்யும் வழிவகைகளையும் குறித்துக் கருதியிருத்தல் வேண் டும்போலும். கன்னியாகுமரிக்கு வந்து மீண்ட சில வாண்டுகளின் பின் அமெரிக்கா முதலிய மேலை நாட்டு மக்கள் முன், தன் உட்புற, உடல்தோற்றப் பொலிவு மின்னலாக, இடிபோன்று முழங்கிப்பேசி, யாவரும் வியக்குமாறு தன் கருத்தை தெரிவித்தார் இத்தகைய பெரியார் இந்தியாவின் எழுச்சிகொண்ட உணர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டு. இத்தகைய பெரியாரால், கன்னியாகுமரியின் கீழ்கடலில் காணும் பாறைகள் தூய நிலையடைந்து, விவேகானந்தர் பாறை என்னும் பெயரினையும் பெற்றது அடிகளாரது திருவடி பட்டமையால் போலும்.

இன்றும் கன்னியாகுமரிக்கு வரும் துறவியர் இப்பாறைக்குச் சென்று நெடுநேரம் தவமிருப்பது வழக்கம். யாத்திரிகர்களும் வாடகைக்குக்கிடைக்கும் கட்டுமரம் அல்லது சிறு படகில் இப்பாறைகளுக்கு இன்பச் செலவாகச் சென்று களிப்படையலாம். இங்கு ஓர் நன்னிரூற்றினையும், ஓர் பழங்கோயிலின் அறிகுறிகளையும் இன்றும் காணலாம்.

## விவேகானந்தர் நூலகம்

விவேகானந்த அடிகளாரது கன்னியாகுமரி வருகையின் நினைவுக்குறிக்காகப் பொதுமக்களால் ஓர் நூல் நிலையம் உருவாக்கப்பட்டது. இது இன்று ஏறத்தாழ 5000-க்கு மேற்பட்ட புத்தகங்களைக் கொண்டுள்ளது. சிறப்பாக, இந்து சமய நூற்களும், மெய்யறிவு நூற்களும், இலக்கிய நூற்களுமே காணப் படும். மகாத்மா காந்தியடிகளாரும், அவர்போன்ற ஆன்றோரும் இந்நூல் நிலயத்திற்குவரப்பெற்று, அன்னோர் பாராட்டுதலையும் பதிவேட்டில் பெற்றுள்ளது.

## விசுவநாதர் கோவில் முன் சக்கரக்குளம்

கன்னியாகுமரியிலிருந்து வடக்கே ஒரு கல் தொலைவில், பெருவழியருகே, காசி விசுவநாதர்

கன்னியாகுமரிக் காசி விசுவநாதர் கோவில் முகப்பு.



கோவில் ஒன்றுண்டு. இக்கோவிலருகே ஓர் குளமும் காணப்படுகின்றது. இதுவே சக்கரகுளம் எனும் பெயரினையுடையதாகும். இவ்வூர்த் தேவியின் சக்கரைப்படை, பாணாசுரன் தலையைக் கொய்தபின் இவ்விடத்தில் வீழ்ந்து நிலங்கீற நீரூற்றுத் தோன்றிற்று; இதுவே குளமாகப் பெருகியது என்று இவ்வூர்த்தலபுராணம் கூறுகின்றது. இவ்விடத்தில், கீழ்ப்புறம் ஓர் சுடுகாடும் காணப்படுகின்றது. ஆகவே, கோவிலும், நீரூற்றால் நிறைந்த குளமும், சுடுகாடும் உடைய இவ்விடம் விசுவநாதர் கோவிலும், அருகில் பாதாள கங்கையும், கீழ்ப்பாகத்தில் சுடுகாடு முடைய காசிக் காட்சியையே நினைவூட்டுகின்றது என்னலாம்.

## வட்டமிடும் அலையருகே வட்டக்கோட்டை

கன்னியாகுமரி முனையிலிருந்து கீழ் கடற்கரையில் 3 கல் தொலைவு சென்றால், ஓர் கோட்டையைக் காணலாம். இதற்கு இதன் அமைப்பால் வட்டக் கோட்டை என்று பெயர். இங்குப் பழமையான கோட்டை கொத்தளங்கள் இருந்த அறிகுறிகளை இன்றும் காணலாம். இத்தகைய கோட்டை திருவிதாங்கூர் மன்னராகிய மார்த்தாண்டவர்மாவின் படைத்தலைவர் 'டிலநாயின்' பகைப் பாதுகாப்பின் ஓர் பகுதியாகும். இக் கோட்டையமைப்பு, 'டிலநாயின்' திறமைக்கும், பயிற்சிக்கும், நுண்ணறிவுக்கும் ஓர் எடுத்துக்காட்டாகும். இது, இன்று, மாணவர் படைக்கும், சிறு பயணத்தோர்க்கும், ஓர் பாளையப் பட்டாக அல்லது ஓர் களிப்பிடமாகப் பயன்படுத்தப் பட்டு வருகின்றது.

## மேற்குத் தொடர்ச்சியின் தென்முனையாகிய மருந்துவாழ் மலை

கன்னியாகுமரிக்குச் செல்வோர் அதிலிருந்து நான்கு கல் வடக்கே உயர்ந்து தோன்றும் ஓர் மலையைக் காணத்தவருர். இதுவே மருந்துவாழ்மலை எனும் பெயரிணையுடையது. பலவகை மருந்துச்செடி கொடிகளையுடைமையால் இது இப்பெயர் பெற்றதென்பர். இம்மலையில் ஓர் கோவிலும், சில நீர்ச் சுனைகளும், ஒரு மண்டபமும் பல குகைகளும் உண்டு. கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாளன்று இம்மலையுச்சியில் ஓர் பெருவிளக்கிடுவர். அது இம் மாவட்டம் முற்றிலும் இருப்பாருக்கு ஓர் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்து காணும். இங்குப் பலரும் கூட்டங் கூட்டமாகச் சென்று, சமைத்துண்டு பொழுதுபோக்கி வருவது வழக்கம். இத்தகைய மலை பலவகை மருந்து நிறைந்த மலை என்பதற்கு ஓர் பழங்கதையும் உண்டு. இராமபிரான் இலங்கை மன்னனோடு போர் தொடங்கிய காலை, இலக்குவன் முதலியோர் மயங்கி விழவே, அன்னோரை மயக்கத்திலிருந்து மீட்பதற்கு அனுமன் மருந்து நிறைந்த சஞ்சீவி மலையை மண்ணுறப் பெயர்த்தெடுத்து இலங்கை நோக்கிச் செல்லுங்காலத்து ஓர் துண்டு கீழே விழுந்ததென்றும், அதுவே இம்மருந்துவாழ் மலை யென்றும், ஆகவேதான் இப்பெயர் பெற்றதென்றும் கருதப்பட்டு வருகின்றது. எவ்வாருயினும், ஒரு சிலர் முன் தவமிருந்த இம்மலையில் சிறிது பொழுது தங்கின் மனவமைதியும், நல்லுணர்ச்சியும் பெற்று மீள்வர் என்பதுறுதி.



அருணன் அடையும் முன்

மாலைக் கதிரவன் மறையும் தோற்றம்

## முடிவுரை

பொதுவாகக் கடலை ஓர்கால் காணக் களிப்பும் உணர்வும் பெருகும் ஆயின் கன்னியாகுமரிக் கடலை ஓர்கால் காணின் கடல் போன்ற களிப்பில் ஆழ்த்தும். கடல் கரையில் பல வண்ண, பலவகை மணலின்மீது உருண்டுயர்ந்து, உரக்கக் கூவி, மோதிச்செல்லும் அடுக்குடைய அலையைக் காணின், கடலாழத்து மறைந்து கிடக்கும் உண்மையினை நம்மவர்க்கு எடுத்து விளம்ப விரைகின்றதோ அல்லது உயிரை சூழ்ந்த உலக வாழ்வு அதுபோல் கொந்தளிப்புடையதென்று அறிவுறுத்த வருகின்றதோ அல்லது தாஞகிய நீரின்றி இவ்வுலகில்லை என்றதன் இன்றியமையாமையினை எடுத்துணர்த்த வருகின்றதோ என்று பலவாறு எண்ணியறியத் தோன்றும். சிறிது ஆய்ந்து பார்க்கின், இந்தியத் தாயின் திருவடிக்கு வெள்ளிச் சிலம்பணியும் நோக்குடன் அலையாக வளைந்தும் நிலையாக அமைக்க முடியாமையினுல் மீண்டும் மீண்டும் முயல்கின்றதோ என்றும் எண்ணத் தோன்றும் இவ்வாருன பல வகை இன்பச் சூழ்நிலையுடைய இவ்விடத்திற்கு வருவோர், நீர்த்துறையில் ஓர் முறை நீராடி, நித்தந் தவஞ்செய்யுங் குமரி தேவியையும் ஓர் முறை கும்பிட்டுச் செல்லின் அறியமுடியாத அமைதியுடன், அகமகிழச் செல்வார் என்பது உறுதி.

ஆகவே,
மக்கள் மனவமைதியை மகிழ்வுடன் தருவது,
குமரியே.



டாஸ் பிரஸ், நாகர்கோவில்.

